உ

சிவமயம்.

# ஏகவிருத்தபாரதம்.

# ஏகவிருத்தராமாயணம்.

# ஏகவிருத்தபாகவதம்.

ராவணன் செய்த

# சிவஸ்தோத்திரம்.

# விநோதசித்திரவினாவுத்தரக்கவிகள்.

இவை

மானிப்பாய்

ஸ்ரீமான். ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையவர்கள்

கேள்விப்படி

சுன்னாகம்

## அ. குமாரசுவாமிப்பிள்ளையால்

மொழிபெயர்த்தியற்றி

கொக்குவில்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.



சர்வஜித்து கார்த்திகைமீ.

உ

காப்பு வெண்பா.

பாரதஞ்சீ ராமகதை பாகவதக்காதை
ஆரியத்தொவ்வோர்கவியா லன்றுரைத்தார்—சேரவவை
மூன்று மொழிபெயர்த்து மூன்றுகவி யாலுரைக்க
யான்றுதிப்பே னைங்கரனை யிங்கு.



# ஏக விருத்த பாரதம்.



ஐவர்நூற் றுவர்க டோற்ற மரக்குமா ளிகையும் வேதல்
கைவருசூதிற் றோல்வி கானகஞ் செல்வி ராடன்
றெய்வகல வீட்டில வாழ்க்கை நிகழ்நிரை மீட்டல் போர்க்கு
மெய்வெளி தூது நூறு வீரர்சா வைவர் வாழ்வே.



# ஏகவிருத்த ராமாயணம்.



தாதையார் சொலவடவி ராமன் போதல்
சார்ந்துளபொன் மானெனுமா ரீசன் சாதல்
சீதையார் பிரிவெருவை மரணம் பானு
சேயொடுநட் புக்கோடல் வாலி வீடல்
ஓதநீர்க் கடற்பரப்பை யனுமன் றாண்டல
உயரிலங்கை நகரெரியால் வேகக் காண்டல்
பாதகரா மரக்கரெலா மடியத் தாக்கல
பாக்கியரா மாயணச்சீர்க் காதை யீதே.



# ஏகவிருத்தபாகவதம்.



தேவகி வயிற்றிற் கண்ணன் றிருவவ தாரஞ் சேரி
பேய்வளர்ந் திடுதன் மாயப் பூதனை மரணம் வெற்பா
லாவினங் காத்தல் கஞ்ச னழிவுநூற் றுவர்க ளான
மேவலர் மடிதலைவர் வீற்றிருந் துலகம் போற்றல.



# சிவத்தோத்திரம்.

காப்பு வெண்பா.

ஆரியத்திற் றென்னிலங்கை யாரரசன் சொன்னதுதிச்
சாரந் திரட்டித் தமிழ்க்கவியாற்—சீரியர்கள்
பார்க்கும் பொருட்டுப் பகரக் கருணைமதக்
கார்க்குஞ் சரமுகத்தோன் காப்பு.

## நூல்.

கங்கை மாநதி சடையெனுங் கடாகமீ தசைந்து
தங்க வைத்திடுங் கடவுளே தகதகென் றெரியும்
அங்கி நேத்திர சந்திர சேகர வடியேற்
கிங்கு வேண்டுமோற் கணந்தொறு நினைநினைந் திருக்கை. (க)

இமய நந்தினி யம்பிகை சாம்பவி யிருமுச்
சமய நாயகி யாடலின் மனமகிழ் சகாய
திமிர வூறகற் றருட்கண திகம்பர வுனக்கே
அமைய வேண்டுமோ லெனக்குள விருப்பமா னதுவே. (உ)

பனைக்கை மாமுகன் றோலுரி போர்த்திடும் பகவா
அனற்பொ றிக்கணுன் மன்மத னீறுபட் டழியச்
சினக்குஞ் சேவக கபாலிமா தேவநின் சகாயம்
எனக்கு வேண்டுமோற் பிறர்துணை யாவது மிலையே. (ந)

ந மாலையிற் கட்டிய சடாதர நவீன
மக மூடிய * கடையுவா விரவுநள் ளிருள்போ
ரகுங் கந்தர செகதல துரந்தர வகக
ரக நாயக மங்கலம் பெருக்குக வெனக்கே. (ச)

கந்த ராந்தகா ரோற்பல சுமனச கஞ்சன்
தந்த சேய்மகாந் தகபவாந் தகசுரர்ப் பகைத்த
அந்த காந்தக முப்புராந் தகபொரு மசுரச்
சிந்து ராந்தமா ராந்தகா சிவசிவ நமவே. (ரு)

சடையின் மேவிய பாம்புயிர்க் காற்றினூற் றழைத்து
நிடல மேலெழு கனற்கணு திமிந்திமி நிகழ்ச்சி
யுடைய மத்தள துங்கமங் கலத்தொனி யொருவா
நடன காரண வெற்றியெற் கருளுக நயந்தே. (சா)

ஓடு பொன்மணி யிவற்றினு முறவினர் பகைவர்
தேடு மன்னவர் காட்டுளா ரிவரினுஞ் சிறப்பு

நீடு பஞ்சலோ பாறையென் றிவற்றினு மிகராய்க்
கூடு நன்மதி யென்றுகொல் வணங்குவேன் குருவே. (௭)

அரச னோர்மகன் றொழுவரு கங்கையாற் றயலே
விரசு காட்டகத் துறைந்துதன் மதியெலாம் விடுத்துச்
சிரசி லஞ்சலி தரித்துநான் சிவசிவ வென்று
பாசி யேசுகம் பெறுவதெக் காலமோ பரனே. (௮)

ஏதந் தீர்த்தரு ணாயக போற்றிவா னிமய
மாது நாயக போற்றிசா னவியெனு மகட்கு
மாதி நாயக போற்றிபே ரன்பினர்க் கருளும்
பாத தாமரை மறக்கிலேன் பரசிவப் பொருளே. (௯)

இலங்கை மன்னவ னிராவணன் பண்டைநா ளிறையோன்
பலங்க ளிந்திடத் தான்புரி துதியிது படித்தோர்
துலங்கு நன்மக வாதிய சுகங்களுந் தூய
நலங்கொண் முத்தியும் பெறுவரென் றிறுதியி னவின்றான். (௧௦)



# விநோதசித்திர வினாவுத்தரக்கவிகள்.

———:o:———

## வியஸ்தசமஸ்தசாதி.

அது தனித்து நின்று உத்தரமான சொற்களை ஒருங்கு கூடிநின்றும் உத்தரமாகப் பாடுவது.

வெண்பா.

நீரின் பெயரென்னை நீண்முதலை நாமமெது
சாருஞ் சிரநாமந் தானென்னை—சீரியதோர்
மெய்ப்பூச்சின் பேரென் வியத்த சமத்தமா
மப்பேர் கொடுத்தா ரதற்கு. (௧)

இங்கே உத்தரம்—அங்கராகம்.

௧. நீரின் பெயர்— அம்.
௨. முதலை ,, கரா.
௩. சிரம் ,, கம்.
௪. மெய்ப்பூச்சு ,, அங்கராகம்.



## ஓசச்சுவி.

அது நீண்டகவியில வினாவும் மிகச் சிறியசொல்லில்
விடையும்வரப் பாடுவது.

கட்டளைக்கலிப்பா.

வெய்ய தானவர் தெவ்வுநா ராயணன்
வேக மேவிய பன்றி வடிவினாற்
றுய்ய தெண்டிரை மேலெடுத் திட்டதெவ
தூய தேவுல கோர்கடைந் தற்றைநாள்
ஐய பாற்கடற் பெற்றெடுத் திட்டதென்
அல்ல தார்ச்சனை யோமதிப் பேரவை
வைய மாண்ட தசரதன் மாமகன
வருந்த நீசன் கவர்ந்தவள் யாவளோ. (உ)

உத்தரம்—பூசுதை.

| | | | |
|---|---|---|---|
| க-ம் | வினாவுக்கு விடை, | பூ | —பூமி. |
| உ-ம் | ,, | ,, | சுதை —அமிர்தம். |
| ௩-ம் | ,, | ,, | சு —பூசை. |
| ச-ம் | ,, | ,, | தை —ஒருமாதம். |
| ரு-ம் | ,, | ,, | பூசுதை—சீதை. பூ-பூமி. சுதை-மகள். |

---

## சகௌதுகசாதி.

அது குறட்கவியில் வினாவும் பல எழுத்துகளால் நீண்ட
சொல்லில் விடையும் வரப் பாடுவது.

குறள்வெண்பா.

தேடுதலெ னள்ளொற்று நீக்கி யடைபெருமை
கூடுறவு மைதுனமென் கூறு. (௩)

உத்தரம்—இலைப்புரைகிளைத்தல்.

க. இலைப்புரைகிளைத்தல்—தேடுதல். (சிங். கன. கஅரு.)
உ. இலை — அடை.
௩. புரை — பெருமை.
ச. கிளை — உறவு.
ரு. தல் — மைதுனம்.

---

## பிரச்சினோத்தரம்.

அது வினாவமைந்த பாகத்திலே விடையுமமைந்து
மறைந்துகிடக்கப் பாடுவது.

வெண்பா.

கங்கை தரித்திரந்தார் காமர் சடாடவியிற்
றங்குவதென் றொண்டர் தமக்கவர்தா—மிங்ககலச்
செய்வதுவென் கட்செவிகள் சேர்ந்தவருக் கெவ்வாறும்
இவ்வினவி லுத்தரமு மெண். (௪)

இ-ள். கம் கை தரித்து இரந்தார் - தலையோட்டினைக் கையிலே தரித்து யாசித்தவராகிய சிவனுடைய—

உத்தரம்.

க. கங்கை. உ. தரித்திரம்—வறுமை. ௩. தார்—மாலை.

## கதிநாபநுதி.

அது வேறு பொருளினைப் பிறிதாலே வினவுணர்த்துஞ் சொல்லிற்றானே விடை மறைந்துகிடந்து அரிதுணரப் பாடுவது.

வெண்பா.

யாது நிசிசரனுக் கெய்துபரி யாயபதம்
ஏது பெயரு ளிடுகுறிபல்—லாத துதான்
ஆரிருந்தார் தேரானுக் காய்ந்தகதி நாபநுதி
யாரு முணர்க வினிது. (௫)

உத்தரம்.

க. யாது — அரக்கன். (சேதுபு. சேதுமாதவ. ௪00.)
உ. ஏது — காரணப்பெயர்.
௩. ஆர் — ஆத்தி.
௪. ஆர் — பூமி.

## விடமசாதி.

அஃது உத்தரத்திலே வேண்டும் எழுத்தை விலக்குதலினாலே வேறுத்தரம் வரப் பாடுவது.

வெண்பா.

ஆனூரின் பேரென்னை யாண்மானின் பேரென்னை
பேரா திறநது பெயர்ந்துநிலை—கூறுவதின்
நாமமென்ன நீரென்னை நன்னீர்த் திரையென்னை
தோமில் விடமமெனச் சொல். (௬)

உத்தரம்—கமலை.

ச. கமலை } — திருவாரூர்.
உ. கலை — ஆண்மான்.
ஙா. மலை
சு. கம் — நீர்.
ரு. அலை — திரை.



## வர்ணோத்தரம்.

அது தனித்தனி எழுத்தாகப் பிரிந்து உத்தரமாகப் பாடுவது.

வெண்பா.

நாரணனார் மார்புறையு நாயகியார் வன்மைதனக்
கோரெழுத்துப் பேரென்ன வோதுதெய்வப்—பேரென்னை
புள்ளுணர்த்து நாமமென்ன பொல்லாத ராவணனாற்
கொள்ளப்பட் டாளெவளோ கூறு. (எ)

உத்தரம்—சீதாதேவி.

க. சீ — இலக்குமி.
உ. தா — வலிமை.
ஙா. தே — தெய்வம்.
ச. வி — பறவை. (இரகு. மீட். சஅ. பா.)
ரு. சீதாதேவி.



## சிருங்கலாசாதி.

அஃது உத்தரமாய்நின்ற ஒரு சொல்லின் இறுதி எழுத்துப் பின்வரும் உத்தரத்தின் முதலெழுத்தாகவும், அதன் இறுதி எழுத்தே அடுத்த உத்தரத்தின் முதலெழுத்தாகவும் வந்து இங்ஙனமே சங்கிலி போலத் தொடராகப் பாடுவது. சிருங்கலை—சங்கிலி.

வெண்பா.

மாதருவின் கொம்பென்னை மாசைகொண் டோன்பெயரென்
ஓதியதோர் வேட்டையென் னூர்திபெயர்—யாதரக்கர்
தாக்கு நெடும்போரிற் றுசரதி வாகனமென்
யாக்குஞ் சிருங்கலையா வெள். (அ)

உத்தரம்—சாகாமிருகயானம்.

க. சாகா — மரக்கொம்பு. (இராமா. சுந். ஊர். அஉ.)
உ. காமி — ஆசைமிக்கோன்.
ஙா. மிருகயா — வேட்டை.
ச. யானம் — ஊர்தி.
சாகாமிருகயானம்— குரங்குவாகனம்.



## நாகபாசசாதி.

அஃது எழுத்துகள் இடைவிட்டு இருபக்கத்திலும் நாகபாசம் போலத் தழுவியும் இறுதி முதலெழுத்துக்களுள் யாதாயினுங் கெட்டும மாலைமாற்றாகியும் முறை முறையே உத்தரமாகப் பாடுவது.

வெண்பா.

வேத முதல்வன் விழுப்பெயரே னக்கடவுள்
காதலிபே ரவவிருவர் காதலமர்—ஓர்தலப்பேர்
தேவ னவனிரவு சேர்மதிப்பேர் பின்மதுவின்
மாவருடப் பேரென்னே மற்று. (௯)

உத்தரம்—வைகாசிமாரி.

| | | | |
|---|---|---|---|
| க. | காமாரி | — | சிவன். |
| உ. | சிவை | — | உமாதேவி. |
| ௩. | காசி | — | ஒரு சிவஸ்தலம். |
| ௪. | மாசி | — | ஒருமாதம். |
| ௫. | வைகாசிமாரி | — | வைகாசிமழை. |

---

## நாகபாசபேதம்.

கட்டளைக்கலித்துறை.

நெற்றிக் குறியொடு மல்லிகை நாமமென் னீளரிநெஞ்
சுற்றுக் கிளரு மகளா ரவட்குமுன் னுற்றவளார்
மற்றுப் பிரமன் பிதாவவன் மாவலி மாட்டடையப்
பெற்றுப் புரந்தவள் பேரெவை யுத்தரம் பேசுகவே. (௧0)

உத்தரம்—திலகமாலதிதி.

| | | |
|---|---|---|
| | மா | |
| தி | ல | க |
| | தி | |

| | | | |
|---|---|---|---|
| க. | திலகம் | — | நெற்றிக்குறி. |
| உ. | மாலதி | — | மல்லிகை. |
| ௩. | மா | — | இலக்குமி. |
| ௪. | கலதி | — | மூதேவி. (நடுவறை மூன்றாமிறுதிநின்று வாசிக்க.) |
| ௫. | க | — | பிரமன். |
| ௬. | மால் | — | விட்டுணு. (மேலே நின்று கீழே வாசிக்க.) |
| எ. | அதிதி | — | வாமனன்றாய். (நடுவறையோடு கீழ்முதல் வாசிக்க.) |

## சௌத்திரசாதி.

அஃது உத்தரமாய் நின்ற சொற்களெல்லாஞ் சேர்ந்து ஓரிலக்கண சூத்திரமாய்வரப் பாடுவது.

வெண்பா.

வன்மையுணர் சொல்லரிய மாவில்லாப் போதொளிர்கூர்
அானேவிளி யாகியிடை யங்கொழித்துச்—சொன்னபதம்
மற்றெனவைதொல காப்பியத்தென் மன்னுமுரிச் சொல்லுணர்த்துஞ்
சிற்றுருவந் தோராசூத் திரம. (கக)

உத்தரம்—மல்லல்வளனே. (தொல். உரி.)

க. மல் — வன்மை.
உ. அல் — இரா.
ங. வள் — கூர்.
ச. அனே — அன்னே.

---

## மந்தியவர்த்தமாஞக்கரசாதி.

அது சில எழுத்துகளை இடையிற் சேர்த்தலால் வேறெருத்தரமாக வரப் பாடுவது.

வெண்பா.

தம்பியுடன் கானகம்போய்ச் சாலகடங் கடரை
அம்புவிலிற் பூட்டி யழித்தவஞர்—இம்பரவன்
கோல மனேயாளைக் கொண்டுசென்ருன் யார்நடுவி
ஞெலெழுத்துச் சேர்த்து நவில். (கஉ)

உத்தரம்.

க. இராமன்.
உ. இராக்கதர்மன்—இராவணன்.

---

## கதப்பிரத்தியாகதசாதி.

அஃது உத்தரமாய்நின்ற சொல்லே மாலை மாற்ருக இறுதியினின்று வாசிக்கப்பட்டுப் பின்னும் உத்தரமாகப் பாடுவது. இரண்டு சொல்லே புள்ளடிபோல நீளமுங் குறுக்குமாக வரையப்பட்டு இரண்டுக்கும் நடுவெழுத்து ஒன்ருகவும், அவ்விரண்டும் இறுதியினின்று வாசிக்கப்பட்டுப் பின்னிரண்டு சொல்லாகவும் வரப்பாடுவதும் கதப்பிரத்தியாகத சாதியுள் ஒன்று. கதம்—போதல். பிரத்தியாகதம்—திரும்பிவருதல். இதனைத் தமிழ்நூலார் மாலைமாற்று என்பர்.

கட்டளைக் கலித்துறை.

சீதேவி யேயென வள்ளியை யீன்று திகழ்ந்துளதென்
பாதோ பிறப்பி னிழிந்தது வேத னிடம்வடுகென்
சோதா ரகந்தை யுடனே கவர்ந்ததென் கூற்றுறைத்த
மாதேவ ளேட்டுவ தன்ப ரிடத்தினின் மற்றெதுவே. (கங)

உத்தரம்.

க. மிருகி — பெண்மான்.
உ. கிருமி — புழு.
ங. குருதி — இரத்தம்.
ச. திருகு — மாறுபாடு.

| | | |
|---|---|---|
| | கு | |
| மி | ரு | கி |
| | தி | |



## காகபாதசாதி.

காகத்தின் பாதம்போல அமைக்கப்பட்ட சித்திரதளத்திலே
எழுத்துகள்நின்று முறையே உத்தரமாகப் பாடுவது.
அதற்கு அறை மூன்று. நடுவறை நீண்டு காகத்
தின் மேற்பதம்போலிருக்கும். அதன்கண்
ணின்ற எழுத்துகளே மூன்றுக்கும்
முற்பாகமாகும்.

கட்டளைக் கலித்துறை.

வெய்ய விராவணி போரிற் பிணிக்க விடுத்துளதென்
சைய முருவிய வேலோற்கு முன்மனைத் தையலெவள்
வைய மறிஞனை யெங்ஙன் மழைத்திடும் வாளரவின்
பையுள தெப்பொருள் பார்ப்பதி பேரென் பகருகவே. (கச)

உத்தரம்.

க. நாகபாசம் — இந்திரசித்துவிடுத்தது.
உ. நாகதனயை — தெய்வயானை.
ங. நாகர — அறிஞ!
ச. மணி — இரத்தினம்.
ரு. நாகரமணி — பார்ப்பதி.



## காகபாதபந்தம்.



## அட்டதளபதுமபந்தம்.

எட்டிதழ்த்தாமரை வடிவமாக வரையப்பட்ட சித்திரத்தின் பொருட்டாகிய நடுவில்நின்ற எழுத்தே எட்டு விடைக்கும் முதலெழுத்தாய்வரப் பாடுவது.

கட்டளைக் கலித்துறை.

வன்மை தருக்கொரு சித்தி கலிங்கு வரமுனியாழ்
தென்மலே மன்ன னகரி யருச்சுனங் தேநறவம
என்னுமி வற்றின் பரிபாய நாமமென் யானைபரி
மன்னவன் பேரென் பதும தளத்திடை வைத்துரையே (சரு

உத்தரம்.

க. மதுகை — வன்மை.
உ. மதம் — தருக்கு.
ங. மகிமா — ஒருசித்தி.
ச. மதகு — கலிங்கு.
ரு. மகதி — நாரதன்யாழ்.
சு. மதுரை — பாண்டியனகர்.
எ. மருது — அருச்சுனம்.
அ. மதிரை — நறவம்.

இவற்றின் இறுதி எழுத்துகளைக் கூட்டிவாசிக்கப் பின்னைய மூன்று வினுவுக்கும் விடையாகும்.

க. கைம்மா — யானை.
உ. குதிரை — பரி.
ங. துரை — மன்னவன்.

## அட்டதளபதுமபந்தம்.



### அர்த்தகூடம்.

அது பொருளை மறைத்தல்.

வெண்பா.

கண்ணீரா றெய்தலொடு கையாறு நானடைய
பண்ணுது காலா நியைந்தானைக்—கண்ணாரப்
பார்த்தனையோ சொல்லென்னப் பாவாய் மறுவற்ற
கீழ்த்திசைபா ரென்றனள்பாங் கி. (கசு)

இதுவுமது.

தென்ற லசைந்துவரத் தேகமெலிந் துள்ளமெலாங்
கன்றிமயல் கொண்டொருத்தி கண்மூட—நின்றசகி
காதுத் துளையிரண்டுங் கைத்தலத்தி லூற்புதைத்தாள்
யாதுகருத் தோவெனகன் றெண். (கஎ)

---

### பதகூடம்.

அது சொல்லை மறைத்தல்.

வையகத்தின் மேவினர்க்கு வாய்க்குமேன் மற்றென்பேர்
துய்ய † சுகமென்று சொல்லுவேங்—கையகன்ற
ஏமந் தருமனத்தி லிச்சைதரு மங்கணன்
னாமந் தருமென்று காடு. (கஅ)

## ஆமந்திரிதகூடம்.

அது விளியை மறைத்தல்.

தோமேவா தென்றுஞ் சுகமென்று நின்றிவரை
டேபா மரைமேவித் தேனுண்பாய்—சோமோ
தயமேவி ரெளர்செய்வாய் சந்தேக மிலலை
யைபப நீங்கி யாமபவிடம பார்.

எழுவாய் பயனிலைமறைபடு.

கட்டளைக் கலிப்பா.

ராடு ரன்கய நோயினை சூரியன்
  தாப மேவிய செஙகரங கொண்டுளார
இந்தி ரன்குல கோத்திரத் தோரபகை
  யிச மிறைருகாககிளை வைத்துளார
அந்த ணன்திருக் கெட்டுள ஞாயிறு
  ஞரு மேயென மாதவன மேவரு
மைந்த மேவாபடை யானபலை சிந்துர
  மடைந்து விற்றிருந் தாணமையிரா றெனமெ (௪௬)

---

## சொற்பிரேளிகை.

விருத்தம்.

சொன்னதையே சொன்னாலுந் தூதனன்று
  சூழரிக ணடுவிருந்து மவைரி யனறு
மன்னுசெநதார் புனைந்திடினும வடுக னன்று
  வனமபுகுநது காயுணினும் துறவி யனறு
மன்னுசுக மெனபபடு நும பழங்கண் மேவும
  பக்கமொரு வாதுபினு மமைச்சு மனறு
கன்னிகையுண மேவினுநதா மரையு மனறு
  கலைஞர்களே யின்னதெனக் காட்டு வீரே

அரிகள்—பகைவா. வைரி—பகையுடையவன.
பழங்கண்—துன்பம. கன்னிகை—தாமரைப போகுட்டு

## பொருட்பிரேளிகை.

வெண்பா.

அங்கனையாற் கண்டதலத் தாலிங் கனமருவி
யங்கனைதன் சீர்க்கடிமே லங்கமர்ந்தே—யஙகனையிரா
தக்கமுத லோர்முனனுஞ் சற்றுமஞ்சா தங்கிரைக்கும்
மந்தரொனி யார்க்குளதோ மற்று. (௨௧)